# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Thursday the 11th August 1960.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Transfer of certain villages of the Polur taluk*

* 91. *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா--

வடாற்காடு மாவட்டத்தில் போளூர் தாலுகாவிலிருந்து எந்த கிராமங்களை ஆரணி தாலுகாவுக்கும், ஆரணி தாலுகாவிலிருந்து எந்த கிராமங்களை போளூர் தாலுகாவிற்கும் மாற்ற உத்தேசம் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : There is no proposal to transfer any village from Polur taluk to Arni taluk, but a proposal to transfer 21 villages of Arni taluk to Polur taluk is under the consideration of the Collector of North Arcot.

SRI S. M. ANNAMALAI : அப்படி சில கிராமங்களை மாற்றுகின்றபோது மக்கள் தொகை அடிப்படையில் மாற்றப்படுகின்றதா ? அவ்வாறு மாற்றும்போது அந்தத் தொகுதி சட்ட மன்ற உறுப்பினர்களைக் கலந்து ஆலோசித்து முடிவு எடுக்கப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : முக்கியமாக நிர்வாகத்திற்குச் சௌகரியமாக இருக்கும் முறையிலே இந்த மாற்றங்கள் செய்யப்படுகின்றன. இந்த வருஷமும், 1961 மார்ச் மாதம் வரையிலும் கவனிக்க முடியாது. ஏனென்றால் சென்சஸ் எடுக்கிறார்கள். அதுவரைக்கும் இது நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது.

SRI S. M. ANNAMALAI : இந்தக் கிராமங்களை மாற்றக் கூடாது என்று பஞ்சாயத்து போர்டிடம் இருந்து ஆட்சேபனை வந்திருக்கிறதா ? அப்படியிருந்தால் அந்தப் பஞ்சாயத்து போர்டு பிரசிடெண்ட்டையும், அந்தப் பகுதி சட்ட மன்ற உறுப்பினரையும் கலந்து ஆலோசித்து முடிவு எடுப்பார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் கொடுத்த கேள்விக்குப் பதில் போளூர் தாலுகாவில் மாற்றம் இல்லையென்று சொல்லிவிட்டேன். நான் சொன்னது புதிது.

[11th August 1960

**Sri V. SUBBIAH :** *நமது ராஜ்யத்திலே ஜமீன்தாரி ஒழிப்பிற்குப் பிறகு பல கிராமங்கள் குறிப்பிட்ட தாலுகாவிலிருந்து 40 மைல் தூரத்தில் இருக்கின்றன. அவற்றைச் சமீபத்தில் உள்ள தாலுகாவுடன் இணைக்க என்ன திட்டம் இருக்கிறது ?*

**The Hon. Sri M. A. MANICKAVELU :** *இந்தக் கேள்வி வட ஆற்காடு மாவட்டத்தைப் பொருத்தது. கனம் அங்கத்தினர் பொதுவாகக் கேட்பதால் தனியாகக் கேட்டால் பதில் அளிக்க முடியும்.*

*Ship-building yard at Tuticorin*

* 92. *Q.*—Sri V. K. KOTHANDARAMAN : *கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—*

*(அ) கொழும்பு திட்டப்படி, பிரிட்டனிலிருந்து வந்த நிபுணர் கோஷ்டி தூத்துக்குடி கப்பல் கட்டத் தகுதியான இடம் என்று சிபாரிசு செய்தார்களா ?*

*(ஆ) அப்படியானால், அதன்பேரில் என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டது ?*

The Hon. Sri R. VENKATARAMAN : (அ) No, Sir.

*(ஆ)* Does not arise.

*Figures of leaders on the postage stamps*

* 93. *Q.*—**Sri P. G. MANICKAM :** *கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) தபால் தலைகளிலே எந்தெந்தப் பெரியோர்களின் உருவங்களை வெளியிடப்பட வேண்டுமென்று சென்னை சர்க்கார் மத்திய சர்க்காருக்குத் தெரிவித்திருக்கிறார்கள் ?*

*(ஆ) எந்தெந்த பெரியோர்களுடைய உருவப் படங்களை வெளியிட சர்க்கார் சம்மதித்திருக்கிறார்கள் ?*

*(இ) 1960-61-ம் வருஷத்திலே மத்திய சர்க்காரால் புதிதாக வெளியிடப்போகும் தபால் தலைகளிலே சென்னை சர்க்காரால் தெரிவிக்கபட்டிருக்கும் பெரியோர்களுடைய உருவங்கள் அச்சிடப் படுமா ?*

The Hon. Sri V. RAMAIAH : **(*a*)** No recommendation has been made in this regard by this Government to the Central Government.

(*b*) & (*c*) Do not arise.

**Sri P. G. MANICKAM :** *சென்ற வருஷம் நமது சென்னை அரசாங்கம் முயற்சி எடுத்ததன் காரணமாகத் திருவள்ளுவர் படமானது தபால் தலைகளில் பொறிக்கப்பட்டது. இந்த ஆண்டிலும் அதே போல் நம்முடைய நாட்டிலுள்ள பெரியோர்களின் படங்*